# விபீஷணன்



நா. சிவசுப்பிரமணியன், எம். ஏ

இந்நூல்
சேரன்மாதேவித் தமிழ்ப் பேரவையில்
8—9—75 அன்று, நூலாசிரியர்க்கு நடைபெற்ற
பாராட்டு விழாவில்
கம்பரடிப்பொடி, பேராசிரியர்.
**இரா. இராதாகிருட்டிணன்,** எம். ஏ., அவர்கள்
[தேசியக்கல்லூரி, திருச்சிராப்பள்ளி.]
முன்னிலையில்,
தமிழ்ப்பேரவைத் தலைவர்
**திரு. மா. சுப்பிரமணியம்,** அவர்கள் தலைமையில்
**திரு. எம். சிவகுமார்,** எம். காம்., அவர்கட்கு
[கோட்ட ஆட்சித் தலைவர், சேரன்மாதேவி.]
முதற்படி வழங்கிப்
புலவர் **திரு. ஆ. முருகேசனர்** அவர்களால்
வெளியிடப்பெற்றது.

# விபீஷணன்



நா. சிவசுப்பிரமணியன் M. A,
தமிழ்த்துறை,
சேவியர் கல்லூரி.

விற்பனை உரிமை:-
ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்,
கோர்ட் ரோட்,
நாகர்கோவில்-1.

ரூ. 2-00

முதல் பதிப்பு: ஆகஸ்ட் 1975.

விபீஷணன் செயல்கள் ஏற்புடையன அல்ல
வழக்காடு மன்றத்துக்காகத்
தயார்பண்ணிய நூல்.

அச்சிட்டது
மெர்க்குரி பிரிண்டர்ஸ்,
பாளையங்கோட்டை.

# பிரக்ஞையில் சில தெறிகள்



ஏன் எப்படி என்ற வினா இலக்கியத்துள் கேட்கப் பட்டால் விபீஷணன் மாதிரி நூற்கள் உருவாகலாம். வக்கிரமான சிந்தனை, அல்ல, வளமானதுவே.

பலரின் உற்சாகம் இந்நூல் உருவாவதற்குக் காரணம் என்பேன். கல்லூரி முதல்வரின் அனுமதியும், பேராசிரியர் திரு. பொன்னரசு M. A., B. T., அவர்களின் பேராதரவும் என் நினைவில் சுழல்கின்றது.

மற்றும் என் நண்பர்கள் பலர்.

இவர்களுக்கெல்லாம் என் நன்றி.

நா. சிவசுப்பிரமணியன்.

இராவணனுடைய புதல்வர்கள் இந்திரஜித், அதிகாயன், அக்ககுமாரன் போன்ருேர். தம் இன்னுயிர்த் தந்தைக்காக இயற்றும் கடமைகளில் எந்த மனமுடங்கலும் தடங்கலும் கொண்டார்களில்லே. போர்ப்பணி என்ருல் களம் செல்ல அணியமாகவே இருந்தார்கள். ஆனல் இலங்காதிபதியின் இளவல்கள் மன்னவனிடம் குறை கண்டார்கள்; அவனின் குற்றத்தை உணர்ந்தார்கள். அப்படி நோக்கிய இருவரின் போக்கும் வெவ்வேறு திசை களில் சென்றன. அழிவுப்பாதையில் அடியெடுத்து வைத்து விட்டான்: அவனின் வாழ்நாட்கள் எண்ணப்படுகின்றன என்பதும் தெரிகின்றது அவர்களுக்கு. கும்பகர்ணன் அண்ணனுக்காகவே உயிர் வாழ்கிருன். விபீஷணனே அன்பைக் காட்டிலும் அறத்தின்மேல் பக்தி உள்ளவனுக இராமனேடு சென்று இணைகிருன்.

இராவணனுக்கு இளையவன் விபீஷணன், இராமனேடு இணைந்தது ஏற்புடைத்தா என்ற கேள்வியை என்னுள் கேட்டு அதற்குரிய விடையையும் ஒருவாறு காண முயன் றுள்ளேன்.

இராமனின் துணைவி சீதையைத் தேடுவதற்காகப் புறப்பட்ட அனுமன், பல்வேறு இடங்களில் தேடியபின், ஜடாயுவின் தமையனை சம்பாதியைக் கண்டு, இலங்கையை நோக்கி ஏகுகிருன். ஊர் தேடும் படலத்தில் வீடணன் இருக்குமிடம் மற்றையோர் இடங்களினின்றும் மாறுபாடும் வேறுபாடும் உடையதாயிருக்கின்றது.

அதன் பின்னர் அனுமனை இராவணன் கொல்ல முனைந்தபொழுது வீடணன் தடுக்கின்ருன். தம்பியின் ஆலோசனையைத் தலைமேற் கொண்டு அனுமனைக் கொல்லாமல் விடுவிக்கின்ருன். மந்திராலோசனைப்

பொழுதில் இரண்யன் கதையைக் கூறிச் சீதையை விட்டு விடக் கூறுகிறான். இராவணன் மறுத்தபொழுது இராம விடம் இணைகின்றான். இலங்கையின் ராணுவ ரகஸ்யங்களை எடுத்துரைக்கின்றான். படை வீரர்களின் பலஹீனத்தையும் பலத்தையும் பகர்ந்து, தன் இன முடிவிற்கு அடிகோலு கிறான். யார் இறந்தபொழுதும் அழாதவன் இராவணன் இறந்தபொழுது புலம்புகிறான். பின்னர் இலங்கை மன்னவனாக ஆட்சி புரிகின்றான். இதுவே வீடணன் வரலாறு.

இராமன்பால் அதிக ஈடுபாடு கொண்ட அனுமன், தம் சொல்வண்ணத்தால் காலமும் இடமும் மனதில் கருதி, போர் செயக் கிட்டுவோரின் பட்ட நல்வலம் பாகம் எய்தும் வாலியையே காலி செய்து விடுகின்றான். வள்ளலின் தேவியைக் கள்ள வல் அரக்கன் தெற்கிலே வைத்துளான்; தேடி வா என அனுப்பப்படுகிறான் அனுமன்.

சாம்பவானின் தூண்டுதலால், இலங்கையில் கற்பின் கனலியைக் கண்டு, மைவண்ணத்து அண்ணலின் அடையாளம் காட்டிப் பசியால் வாடியோர்க்கு அமிழ்தம் கொடுத்த நிலையை உண்டுபண்ணுகிறான்.

சீதை எங்கிருக்கின்றாள் என்று கண்டுபிடிக்க வேண்டிய பணி அத்தோடு அனுமனுக்கு முடிவடைந்தது. சுக்ரீவ மன்னனின் ஆணையும் அதுதான்.

காதல் தூதனாக வந்தவன் காவினை அழிக்க வேண்டுமா?

இராவணனைப் பார்த்துவா என்று அவனின் தலைவன் சுக்ரீவன் ஆணையும் இடவில்லையே!

அதற்குத்தான் அங்கதன் தூதனாக வருகின்றானே! அனுமனுக்கு இராமன்மேல் அளவு கடந்த பாசத்தால், இராவணன்மேல் வெறுப்புத் தோன்ற அசோக வனத்தை அழித்தான் என்றால் அதுவும் சொத்தை முத்துத் தான்.

இலக்குவனைக் காட்டிலும் இராமனுக்காக அன்போடு வாழ்ந்தவர் குறைவே. இராமன் மிகவும் கோபமாக, தன் கடமை மறந்த சுக்ரீவனைக் கண்டு வரச் சொல்லுகிறான். அந்தச் சமயத்தில் கூட இலக்குவன் நிதானமிழக்கவில்லை.

அனுமன் தூதனாக வராமலே, தூதனின் செயலுக்கு அப்பாற்பட்டு அக்ககுமாரனை, அரக்கர்களை அழிக்கின்றான். தன் நாட்டுக்குள் அரசாணை, அனுமதி பெறாமல் நுழைந்து விட்டு. அநியாயமான செயல்களைச் செய்து, இராவணனால் கொல்ல ஏவப்படும்பொழுது, வீடணன் அதனைத் தடுக்கலாமா?

இளைதாக முள்மரம் களையக்கூடிய கடமையினின்று இராவணனைத் தடுத்த குற்றத்தை உடையவன் விபீஷணன். கொலையில் கொடியாரை வேந்து ஒறுக்க முனைந்தபொழுது பின்விளைவு நினைந்து தடுத்த குற்றம் அவனிடம் உண்டு.

வாலில் நெருப்பினைக் கொண்டு 'மன்னனை வாழ்த்திப் பின்னை வயங்கு எரிமடுப்பன்' என்னு பொன்னகர் மீது தன் போர் வாலினைப் போகவிட்டான் அனுமன்; அழிகின்றது இலங்கா நகரம். அதன் வெப்புத் தாங்க முடியாமல் இராவணனே தன்னகர் விட்டு நீங்க வேண்டிய நிலை என்றால், நெருப்பின் தன்மை புரியும். இராவணன் தன் படைத்தலைவர்களை, அமைச்சர்களை, ஆலோசனை அவைக்கு அழைக்கின்றான்

சுட்டது குரங்கு எரிசூறை ஆடிடக்
கெட்டது கொடிநகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது எங்கணும்;
இட்டஇவ் அரியணை இருந்தது என்உடல்.

என மனப்புழுக்கமடைந்து சொல்லுகின்றான் மன்னன். மகோதரன் முதல் கும்பகர்ணன், இந்திரஜித் வரை உண்மை

நிலையை மனதுள் வாங்கி, மறுவிடை பகர்கின்றார்கள். உள்ளதை உள்ளவாறே எடுத்துரைப்பதால் எந்தவிதமான முகமனோடு முன்னுரையோடு ஆரம்பிக்கவில்லை அவர்கள். ஆனால் விபீஷணனே நீண்ட முகமனோடு ஆரம்பித்து, நான் சொல்வதை எண்ணி என்மேல் கோபப்பட வேண்டாம் என்று கூறுவதிலேயே, அவன் மனநிலை நமக்குப் புரிந்து விடுகின்றது. கும்பகர்ணனும் தன் அண்ணனுக்கு அவனின் தவற்றை எடுத்துப் பேசுகின்றான்.

நீண்ட முகமனோடு தொடங்கவில்லை.
கோபப்பட வேண்டாம் என்று கூறவில்லை.
தனக்கு முன்னர்ப் பேசிய பலரையும் ஒன்றும்
குற்றப்படுத்தவில்லை; குறைவாகப்பேசி இகழவில்லை.

ஆனால் விபீஷணனே இந்திரஜித்தை, அவன் பேசி முடித்த வுடன் இளக்காரமாகப் பேசுகிறான். எகத்தாளமாக நோக்கு கின்றான். எனவே எதிரியின்பால் நெஞ்சை வைத்து, அண்ணன்பால் நஞ்சைக்கொண்டவன் என்பதற்கு முகமனே சான்று.

தம் கருத்தைத் தயங்காது கூறலாம் என மன்னவனே ஆணையிட, பேசிய இந்திரஜித்தைத் தடுத்ததன் மூலம்,

மன்னவன் ஆணைக்குப் புறம்பாக நடந்தவன்;
பேச்சுரிமையைக் கேலியாக்கியவன்

என்பது தெரிகின்றதல்லவா!

இலங்கை இன்பகரமாக இருக்கும்பொழுது, அதில் ஊறித் திளைக்கின்றான் வீடணன். அசுரர்கள் தேவர்களை வெல்லும்பொழுதெல்லாம் வரும் பயனைத் துய்த்தவன் அவன். ஆனால் அனுமனின் வால் திறம் கண்டு, தன் அண்ணனுக்கு அழிவு நெருங்கிவிட்டதை அறிந்து, அகல் கிறான் வீடணன். குளத்து நீரும் மீனும் உள்ளவரை

கொக்கு இருக்கும். நீரும் மீனும் அற்றுப் போனால் ஆங்கே கொக்கா இருக்கும்? அந்தக் கொக்கோ வீடணன் என்று சந்தேகப்பட வேண்டியதாய் உள்ளது. நந்தியின் சாபத்தையும் வேதவதியின் கோபத்தையும் அண்ணனுக்கு எடுத்துரைக்கின்றான்.

அறமற்ற செயலை நீ செய்வதால் உன்னைப் பிரிகிறேன் என்றால்,

வேதவதியை நெருங்கியது
தேவர்களை, தேவ மாதர்களை அடிமைகளாக்கியது
வாலியிடம் போர் செய்தது
நந்தியிடம் இராவணன் செயல்கள்

இவற்றையெல்லாம் விபீஷணன் அறத்தோடு கூடிய செயல்கள் என்று நினைக்கின்றானா?

இரண்யன் கதையைக் கூறியும் கேட்காமையால் போகின்றேன் என்கின்றவன்

வேதவதியிடம் பலாத்காரம் செய்யும்பொழுது
தேவர்களை அடிமைகளாக்கிய நிலையில்
தன் தங்கையின் கணவனைக் கொன்ற நேரத்தில்
வாலியிடம் போர் செய்து தோற்றபொழுது

பிரியாமல் மௌனச் சித்தராக, அறமந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தானா?

இன்பம் என்றால் இனிமையுடன் ஏற்பதும்,
துன்பம் கண்டால் தூர ஓடுவதும்

எந்த அரச நீதியோ, முறையோ தெரியவில்லை.

இராவணன் அறமல்லா வழிகளிலே அரசாட்சி நடத்தியவன் என்பதற்கும் முழு ஆதாரமில்லை. அவனுடைய நாட்டிலே அகழிகள், அரண்மனை மதில்கள், அலங்கார மாடங்கள், அதிகமான சேனைகள் எல்லாமே இருந்தன.

எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை: உடையார்களும் இல்லை; மாதோ"

என்ற அயோத்தியின் வளம் போலவே இலங்கையின் வளமும் இருந்தது. அயோத்தியைவிட வளமுடையது இலங்கை என்கிறான் இராமன். அந்த நாட்டிலே களிக்கின்றார் அன்றிக் கவலைப்படுகின்றவர்களைக் கண்டானில்லை அனுமன்.

பளிக்கு மாளிகைத் தலந்தொறும்
இடந்தொறும், பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண்நறும்
சோலைகள் தோறும்
அளிக்கும் தேறல் உண்டு, ஆடுநர்
பாடுநர் ஆகிக்
களிக்கின்றார்அலால், கவல்கின்றார்
ஒருவரைக் காணேன்."

இராவணன் ஆட்சிக்கு அனுமன் கொடுத்த சான்றிதழ் இது. இராவணனைப் போன்ற பக்தனை நாம் காண்டல் அரிது, அவன் மாபெரும் கலைஞன்.

இறைவனைக் கூட, தன் இசையினால், இனிய இசைக் கருவித் திறமையினால் மயங்க வைக்கக்கூடிய மாபெரும் கலைஞன். கலைஞனுக்கே உரிய சில குறைபாடுகள் இராவணனிடமும் உள்ளன. அதற்காக நாம் அவனை வெறுக்க இயலுமா? கம்பனே கூட அவன் இறப்பிற்காக வருந்துகின்றான்.

பிறரை அடக்கியவன் இராவணன் என்றால், சக்கரவர்த்தி இராவணனுடைய கடமை அது;

சீதையைக் கவர்ந்தான் என்றால், அயோத்திக்கோ, காட்டில் சீதை வாழ்ந்த இடத்திற்கோ தானே வலியச் சென்று எடுக்கவில்லையே! மேலும் கரதூஷர்களைப் போரில் வென்ற இராமனைப் போரில் சந்திக்கப் போர்முறை எனவும் சொல்லலாம்.

சூர்ப்பநகை இழைத்த தீவினையால்தான் இராவணன் மதி மயங்குகிறது. எனவே அக்குற்றமும் அவனிடம் இல்லை.

மண்டோதரிதான் தெளிவாகக் கூறுகின்றாளே!

காந்தையருக் கணிஅனைய சானகியார் பேர்அழகும்
அவர் தங் கற்பும்
ஏந்துபுயத்து இராவணனார் காதலும் அச்சூர்ப்பனகை
இழந்த மூக்கும்
வேந்தர்பிரான் தயரதனார் பணியினால் வெங்கானில்
விரதம் பூண்டு
போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப்
போயிற் றம்மா!

அவனுடைய நாட்டிலே அறவோர்கள் வாழவே இல்லையா?

அவன் மகன் அதிகாயன் அறவோன். வீடணனே விளம்புகிறான்.

அறன்அல் லதுஅல் லதுமாறு அறியான்;
மறன்அல் லதுபல் பணிமற்று அணியான்;
திறன்அல் லதுஓர் ஆருயிரும் சிதையான்
உரன்நல் லதுபேர் இசை என்று உணர்வான்."

எனவே விபீஷணனின் மதிப்புக்குப் பாத்திரப்பட்ட அதிகாயன் போன்று விபீஷணனும் ஏன் நடந்திருக்கக் கூடாது?

அறமுடையவன் பக்கமே அவன் நெஞ்சு என்றால் இராமன் தவறே புரியாதவனா?

முடிசூட்டிக் கொள்க என்று தயரதன் சொன்ன பொழுது, சிற்றன்னைக்குத் தந்தை கொடுத்த வாக்கினை நினைவுபடுத்தாமல் இருக்கின்றான் இராமன்!

"அறவினையும் ஆன்ற பொருள்வினையும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்கண் இல்"

என்ற வள்ளுவத்துக்கு அரணாக.

சீதை மான் பிடிக்கச் சொல்ல, இலக்குவன் தடுத்தும் இராமன் செல்கின்றான்.

இலக்குவன் தான் சென்று பிடித்து வருகிறேன், என்றாலும் இராமனே செல்ல வேண்டும் என வற்புறுத்த இராமன் போகிறான்.

வாலி வதையில் இராமன் நடந்துகொண்டது அறத்தின் வழிப்பட்டதோ என்பது ஐயப்பாடு.

சீதையைப் பிரிவதற்கு முன்னால், அரசினைத் துறந்த பொழுதுங்கூட,

தன் பாவம் என்று கூறாதவன், சுக்ரீவன் இராவணனின் மகுடம் பறிக்கப் பறந்து, வரக் காலந் தாழ்த்தியபோதும், இலக்குவன் அஸ்திரங்களால்பாதிக்கப்படும்பொழுதும் "நான் செய்த பாவமோ" என்பது, வாலி வதையில் தான் நடந்து கொண்டதைத் தான் குறிக்குமோ?

தருமமும் தகவும் சால்பும் இராமனே எனக்கண்டாலும் வாலியின் உள்நெஞ்சு குமுறுகின்றதே

ஓவிய உருவ! நாயேன்
உளது ஒன்று பெறுவது உன்பால்
பூவியல் நறவம் மாந்திப்
புந்திவேறு உற்றபோழ்தில்
தீவினை இயற்று மேனும்
எம்பிமேல்சீறி, என்மேல்
ஏவியபகழி என்னும்
கூற்றினை ஏவல் என்றான்''

மேலும் சூர்ப்பநகை இராமனிடம் காதலும் காமமும் பொங்க வந்தபொழுது,

தனக்கு மணமாகிய செய்தியைச் சொல்லாமல் அந்தண குலம் அரசகுலம் மணம் நடக்கவியலுமா? என்று வேடிக்கை பேசிக் காமத்தீக்கு நெய் வளர்க்கிறானே இராமன்.

காம வேதனையால் கட்டுடல் அழியும் சூர்ப்பனகையிடம் விளையாடியது எந்தவிதமான அறமோ?

எனவே அறமல்லா வழிநாடும் இராவணனை விட்டு, அறக்கடல் இராமனிடம் சென்றான் விபீஷணன் என்றால் அதுவும் ஒப்ப முடியாத வாதமாகிடக்கூடும்!

பந்தம் என்றும் சொந்தம் என்றும் பாராமல் ஈ எனக் கேட்டு வந்தோர்க்கு வாரிக் கொடுத்த வள்ளல் கர்ணன். தன் தாய் குந்திதேவியே முந்தி வந்து, தருமரின் பக்கம் வா, தலைமை தரச் சொல்வோம் என்கிறாள். பதவி முக்ய மல்ல; செஞ்சோற்றுக் கடன்தான் முக்யம் எனக் கூறுகின்றான் கர்ணன்.

திடம்படுத்திடுவேல் இராச ராசனுக்கு
செருமுனைச் சென்று செஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவே எனக்கு இனிப்புகழும்
கருமமும் தருமமும் என்றான்.

கும்பகர்ணனும் தன் அண்ணன் செய்த நன்றியை மறக்க வியலாது என்கின்றான்.

நீர்க்கோல வாழ்வை நச்சி
    நெடிதுநாள் வளர்த்துப் பின்னை
போர்க்கோலம் செய்து விட்டாற்கு
    உயிர்கொடாது அங்குப் போகேன்
தார்க்கோல மேனி மைந்த
    என்துயர் தவிர்த்தி ஆயின்
கார்க்கோல மேனியானைக்
    கூடுதி கடிதின் ஏகி''

ஒருவன் செய்த நன்றியை மறந்தவனுக்கு அப்பாவத்தி னின்றும் மீட்புப் பெற வழியே கிடையாது.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு. — இது வள்ளுவம்.

ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்......
..................................................
ஒருவன் செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என
அறம் பாடிற்றே'' என்கும் ஆன்றோர் பாடல்.

கம்பனே இந்த நன்றிக்கு எப்படி விளக்கம் கூறுகின்றான்.

''உதவி கொன்றார்க்கு என்றேனும்
ஒழிக்கலாம் உபாய முண்டோ''

ஆக இராவணன் செய்த செய்நன்றிக் கடனை மறந்தவன் இந்த விபீஷணன்.

இந்த விபீஷணன் மாத்திரமா செய்த நன்றியை மறந்தவன்? நஞ்சையிலே, நெல் விதையை ஊன்றிவிட்டுக் கரும்பு வரும் என்று எதிர்பார்க்கலாமா?

தினையை விதைத்துவிட்டு, கோதுமையை அறுவடை செய்யக் காத்திருக்கலாமா?

விபீஷணனின் மகள் திரிசடையும் உண்ட வீட்டிற்கு இரண்டகம் பார்க்கின்றாள்.

தன் பெரிய தந்தையின் அழிவுக்குழிக்கு ஆழந்தோண்டியவள். இவள் எதற்காக, ஏன், எப்படிச் சீதையின் அருகில் வந்தாள் என்பது சந்தேகத்துக்குரியதே!

மகாபாரதத்திலே நகுல சகதேவர்களின் தாயார் மாத்ரிக்கு மத்திர தேசாதிபதி சல்லியன் உடன் பிறந்த சகோதரன். பாண்டவர்களைக் காண உப்பிலாவிய நகரத்துக்குச் சேனை சூழச் செல்கின்றவனுக்கு இடையில் துரியோதனன் விருந்து கொடுக்கின்றான். கைம்மாறு என்ன செய்ய, என்று சல்லியன் கேட்க, பாண்டவ - கௌரவ யுத்தத்தில் தன் பக்கமிருக்கச் சொன்னவுடன், செஞ்சோற்றை மனதில்கொண்டு உடன்பட்டு விடுகின்றான். தர்மம் நோக்கிச் சென்றவன்கூட, செஞ்சோற்றை நினைந்து மாறுபட்டு, துரியோதனனுக்காகச் சண்டை செய்கிறான்.

ஆனால் திரிசடையோ இராவணனின் அரண்மனைச் சோற்றை, உண்டு சீதைக்கு ஆதரவாக இருக்கின்றாள். கனவினைக்கூறி, இராவணன் அழிக்கப்படுவான் என்று உறுதியாக நம்புகிறாள்.

எனவே விபீஷணனின் அருமைப் புதல்வி கூட, அவனின் பாதத் தடங்களிலே, தன் பாதத்தையும் பதிக்கத் தொடங்குகிறாள்.

இராவணன் தான் திரிசடைக்கு என்ன தீமை புரிந்தானோ?

பீஷ்மரை, துரோணரை எல்லாம் குறிப்பிடலாம். அதிகாயன், கர்ணன், சல்லியன் இவர்களைப் போன்று செஞ்சோற்றுக் கடனுக்காக, இராவணன் பக்கமே விபீஷணன் இருந்திருக்க வேண்டும்; இல்லை: விட்டு விடுவோம் ஆனல் கண்ணனின் அண்ணன் பலராமன் எவ்பவன்; தருமனுக்காகக் கண்ணன் போரில் ஈடுபடுவதைப் பலராமன் விரும்பவில்லை.

தருமன் தெரிந்தே சூதாடினன்
வனவாசம் முடிந்து, மறுபடியும் சுதந்திரமாக
இருக்கும் உரிமை பாண்டவர்களுக்கு உண்டு.
இழந்த ராஜ்யத்தைத் திரும்பக் கேட்க பிரதிக்ஞையில்
நிபந்தனை இல்லை.

எனவே கண்ணன் ஆதரிக்கும் தருமனிடம், தான் சேர முடியாது; அதற்காகக் கண்ணனை விட்டுவிட்டுத் துரியோதனன் பக்கமும் போகவியலாது.

எனவே நடுநிலைமை வகிக்கின்றான் பலராமன். விபீஷணன் இராவணனுக்காகப் போர்க்களத்தில் இறங்கி இராம லக்குவரைத் துவம்சம் செய்ய வேண்டாம்.

முந்தைய நிகழ்ச்சிகளில் ஒதுங்கியிருந்த நிலையை - நடுநிலையை இப்பொழுதும் அவன் கைக்கொண்டிருந்திருக்கலாம்.

அரண்மனையிலேயே பத்திரமாக, இருந்திருக்கலாம். அதனை விட்டு விட்டு இராமனிடம் சேர்ந்தது, விபீஷணனுடைய பெருமையைக் குறைப்பதாகவே அமைந்துள்ளது.

இராவணனை விட்டு, வெளியேறியதற்குக் காரணமே அண்ணனின் அதட்டலும் உருட்டலுந்தான் என்று சிலர் சொல்லக்கூடும்.

விபீஷணனை மாத்திரமா இராவணன் அதட்டினான்?

கும்பகர்ணனை, இந்திரஜித்தை அவன் கொஞ்சிக் கொண்டா இருந்தான்?

தையலை விட்டு அவன்சரணம் தாழ்ந்து, நின்
ஐஅறு தம்பியொடு அளவ ளாவுதல்
உய்திறம்; அன்றுஎனின், உளது, வேறும்ஓர்
செய்திறம்; அன்னது தெரியக் கேட்டி; ஆல்"

என்று கும்பகர்ணன் சீதையை விட்டுவிட்டால் வெஞ்சமர் விலகும்; சானகி துயர் தீரும்; வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ் போகாது என்றவுடன் இராவணன் வெகுள் கின்றான்.

மானுடர் இருவரை வணங்கி, மற்றும்அக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு, உய்தொழில்
ஊன்உடை உம்பிக்கும் உனக்குமே கடன்
யான்அது முடிக்கிலேன் எழுக போகென்றான்

என்தேர்ப்படை தருக; சாற்றுக என் கூற்றை ஏவலாளர்க்கு என்றும் பேசுகின்றான்.

கும்பகர்ணன் உடனே இராமன் பக்கம் போய்ச் சேர்ந் தானா? தன் புதல்வனையே எப்படிப்பேசுகின்றான்?

இந்திரஜித்தும், தன் தந்தை, வெல்ல வழியில்லை என்கிறான்.

ஆதலால் அஞ்சி னேன்என்று
    அருளலை; ஆசை தான்அச்
சீதைபால் விடுவை யாயின்
    அனையவர் சீற்றம் தீர்வர்;

போதலும் புரிவர்; செய்த
தீமையும் பொறுப்பர்; உன்மேல்
காதலால் உரைத்தேன் என்றான்
உலகெலாம் கலக்கி வென்றான்'

இப்படி இந்திரஜித் கூறியதும், உன்னையோ, உன் முன்னோர், பின்னோரையோ நம்பி இந்தப் பகையைத் தேடிக்கொள்ளவில்லை. என்னையே நோக்கி யான் இந் நெடும்பகை தேடிக்கொண்டேன். எனவே சீதையை விட முடியாது; இராமன் பேர் உள்ளவரை என் பேரும் இருக்கும் என்று ஏசுகிறான்.

பேதைமை உரைத்தாய் பிள்ளாய்
உலகெலாம் பெயரப் பேராக்
காதைஎன் புகழி னேடும்
நிலைபெற, அமரர் காண
மீதெழு மொக்குள் அன்ன
யாக்கையை விடுவது அல்லால்
சீதையை விடுவது உண்டோ?
இருபது திண்தோள் உண்டால்"

எனவே இந்திரஜித்தும் இதுதான் தக்கசமயம், தந்தை தன்னைக் கடிந்து விட்டான் என்று இராமன் பக்கம் போய்ச் சேரவில்லை. மேலும் விபீஷணன்

புத்திரர் குருக்கள் நின்பொருஇல் கேண்மையர்
மித்திரர், அடைந்துளோர், மெலியர், வன்மையோர்
இத்தனை பேரையும் இராமன் வெம்சரம்
சித்திர வதை செயக் கண்டு தீர்தியோ"

என்றவுடன் வஞ்சத்தை நெஞ்சில் கொண்ட உன்னைக் காட்டினும் நஞ்சினைக் கொண்ட நாகம் மேல் என்கிறான் இராவணன்.

'இரண்யனது பகைவனுக்கு அன்பு பூண்ட பிரகலாதனும் நீயும் ஒருவனையொருவன் ஒத்திருக்கின்றீர்கள்; பிதாவைக் கொலை செய்து, அரசை அடைந்ததுபோல, அண்ணனைக் கொலை புரிந்து ஆட்சியைப் பிடிக்கலாம் என நினைக்கிறாய்' என்று தான் சொல்கின்றான் இராவணன்.

உடனே இவன் தன் அரண்மனைக்குச் செல்லலாம் அல்லவா? விபீஷணன்.

கும்பகர்ணனையும், இந்திரஜித்தையும் இராவணன் ஏசியதைப் போலவே விபீஷணனையும் ஏசுகிறான்.

குருவி உட்காரப் பனம்பழம் வீழ்ந்ததைப் போல, பிரிய வேண்டும் என்று எண்ணிய விபீஷணனுக்கு, இராவணன் சொல்லியது தொக்காகப் போய்விட்டது.

அலகில் கற்புடைச் சானகியை இலங்கையில் அடைத்தது தனக்குப் பிடிக்கவில்லை.

மேலும் இராமன் பிறவி நோய்த் துன்பத்தை நீக்கக் கூடியவன் என்று போகின்றான் விபீஷணன்.

இவன் வரவை இராமனும் அனுமனும் வேறுவிதமாக அல்லவா கணிக்கிறார்கள்.

"இராவணன் பெற்ற பெருவரங்களும், அவனோடு பிறந்த வஞ்சனையும் பிறவும் இராமன் வில்லினால் அழியும் என்று நினைத்தே வந்திருக்கின்றான் விபீஷணன். மேலும் தாயாதிகளுக்கிடையே ஒரே பொருளிடத்து ஆசை வருமேயானால், அவர்கள் சண்டையிட்டுக் கொள்வார்கள். எனவே நம்மை விபீஷணன் அடைய வருகின்றான் என்றால், அண்ணனை வஞ்சிப்பதற்காகவே ஆகும்;" அனுமன் கூற்று.

"பகைப் புலத்தோர் துணையல்ல ரென்றிவனைப் பற்றுமே
 லறிஞர் பார்க்கின்

நகைப் புலத்த தாமன்றே நற்றாய முளதாய
 பற்றான் மிக்க

தகைப்புலத்த தந்தையர்க டம்பியர்க டமையரிவர்
 தாமே யன்றோ

மிகைப்புலத்து விளைகின்றதொரு பொருளைக் காதலிக்கின்
 விளிஞ ராவார்"

இது விபீஷணன், யாரைக் கொல்ல வேண்டாம் என்று தடுத்து, விடுத்தானோ அந்த அனுமன் கூற்று. புரிகிறதல்லவா விபீஷணன் மனநிலை. இந்த அனுமன் கூற்றினைத் தான் அப்படியே செயல்படுத்துகிறான் இராமன்.

கருத்துற நோக்கிப் போந்த காலமு நன்று காதல்
அருத்தியும் அரசின் மேற்றே அறிவினுக் கவதியில்லை
பெருந்துயர் தவத்தினானும பிழைப்பல னென்னும் பெற்றி
தெரித்தன னுகுயன்றே நமவயி சேர்ந்தன் செய்கை.

'இவ் விபீஷணன் தன் மனதுக்குள்ளே அழுந்த ஆராய்ந்து நம்மிடம் வந்த காலம் தகுந்த காலமே. இவனது ஆசை அரசாட்சியின் மேல் உள்ளது.'

மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமாகவும், தருமமாகவும் பாவமாகவும், உலகமாகவும், பகையாகவும் இருக்கும் இராமன் விபீஷணனைப் பற்றிக் கூறும் கூற்று இது.

பிறவியை ஈனும் வித்தாகிய அவாவினை நீக்கத்தானே இராமனை அடைகின்றான்.

பற்றற்றவன் பற்றற்ற நிலையை அடைய வேண்டாமா?

இராமன் முடிசூட்டியதை எந்தத்தடங்கலும் இல்லாமல் ஏற்றுப் புனைகின்றான்; பிறவிநோய் நீங்கவா?

அண்ணனாகிய இராவணன் உயிரோடு வாழ்ந்து, அரசாட்சியை இயற்றிக் கொண்டிருக்கும் பொழுது, இங்கே இலக்குவன் முடிசூட்ட, விபீஷணன் ஏற்கிறான்.

ஆழியா னவனை நோக்கியருள்சுரந் துவகை கூர்ந்தே
ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள்
வாழுநா ளன்றுகாறும் வாளையற் நரக்கர் வைகும்
தாழ்கட லிலங்கைச் செல்வநின்னதே தந்தே னென்றான்.

அதுமாத்திரமா? பரதனுக்குப்போல பாதுகை மகுடத்தை அடியேனுக்கும் பாலித்தருள வேண்டுமென்கிறான். முறையாக இராமனுக்குக் கிடைக்க வேண்டிய, மரபினால் வரும் அரசினைத், தன் திறமையினால் பரதனுக்கு வாங்கிக் கொடுத்தவள் கைகேயி. மரபு மீறப்பட்ட வகையிலேதான், பரதன் கூட வேண்டாமென்றாலும், பாதுகையைச் சூட்டிக் கொள்கின்றான் தன் அண்ணன் இராவணன் வாழும் போதே.

பரதனுக்குக் கிடைத்த பாதுகா மகுடத்தைப்
பாலிக்க வேண்டுமென்றால்
மரபையும் முறையையும் தான் மீற வேண்டும்
என்று அனுமதி கேட்கின்றானோ?

படைவீட்டை விபீஷணனுக்குக் காட்டுக என்றவுடன் அப்போதாவது 'பிறவி நோய்க்கு மருந்தே! என்மேல் பாரம் சுமத்தாதே' என்று முணுமுணுக்கிறானா என்று காதைக் கூர்மையாகத் தீட்டினால் ஒன்றுமே கேட்கவில்லை.

இலங்கையினுடைய இராணுவ ரகஸ்யங்களை, அரண்மனைப் பலத்தை விபீஷணனிடம் சொல்லும்படி கேட்க, இவன் சொல்லலாமா?

"இலங்கையின் மதில் முதலிய காவல் அமைப்புக்களை யும் அரக்கர் வலிமையையும் சேனையளவையும் தெரிவிப்பா யாக" எனக் கேட்கிறான் இராமன்.

அகமதில், இடைமதில், புறமதில் என மூன்று;
மதிலைச் சூழ்ந்துள்ள கடலே அகழி
கும்பகர்ணன் திடகாத்திர முடையவன். இந்திரஜித்
இந்திரனையே ஜெயித்தவன்.

இவனை வெல்ல, 14 ஆண்டுகள் உண்ணாமலும் உறங்கா மலும் இருக்கக் கூடியவனே செயல்பட்டு வெல்ல முடியும். அவன் நிகும்பலையாகத்தை முடிப்பானேயானால் வெல்ல ஒருவராலும் முடியாது.

இராவணனின் மோகன அஸ்திரத்தை மறுபடியும் முறிக்க நாராயண அஸ்திரத்தை அனுப்புதல் வேண்டும் என்றெல்லாம் முக்கியமான ராணுவ ரகஸ்யங்களைச் சொல்லுவதன் மூலம் இராவணன் வீழ்ச்சியை உறுதிப்படுத்த உதவுகிறான்.

குதிரை குழியை மாத்திரம் பறித்தது என்று இருந்தால் குப்புறவும் தள்ளிக் குழியையும் மூடிவிட்டது என்பதைத் தான் இங்கே காண்கின்றோம்.

விபீஷணனை இலங்கைச் சிறைக்குள் அடைக்காமல் இருந்தான் இராவணன்.

இலக்குவனை வீழ்த்திய நேரத்திலும் தனியாக இருக் கும் விபீஷணனைக் கொல்லாமல் கோழை என்று விடுகின் றான் இராவணன். அவனுக்கு விபீஷணன் செய்த கைம் மாறு பாராட்டக் கூடியது தான்.

விபீஷணனின் அண்ணன் கும்பகர்ணன், இராவணன் செய்கின்ற தவற்றினை எடுத்துச் சொல்கிறான். நம் இனம் பழிப்பினை அடையும்; எனவே சீதையை விட்டுவிடு என்கிறான்: அப்படி விடவில்லையாயின் சிறுகச் சிறுகப்படை அனுப்புவதைக் காட்டிலும் எல்லோரும் ஒட்டுமொத்தமாகச் சென்று போரிடுவோம் என்கிறான் கும்பகர்ணன்.

ஆசில்பர தாரமடை யச்சிறை யடைப்போம்
மாசில்புகழ் காதலுறு வேம்வளமை கூரப்
பேசுவது மானமிடை பேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்றுநம் கொற்றம்

என்று மந்திராலோசனைப் படலத்தில் புத்திமதி கூறியவன் முதல்நாள் போரிலே இராவணன் தோற்றபின்னால் மீண்டும் அறிவுரை சொல்கிறான். இராவணனோ அவன் சொல்லைக் காதில் வாங்கவில்லை.

தான் தோற்கப் போவது உறுதி
மீண்டும் வரமாட்டோம் என்பதும் தெரியும்

இருந்தும் அண்ணனுக்காகத் தன் உயிரைக் கொடுக்கும் கும்பகர்ணனின் சகோதரப் பாசம் விபீஷணனிடத்து இல்லை

வென்றிவன் வருவனென் றுரைக்கி லேன்விதி
ஒன்றது பிடர்பிடித் துந்து கின்றது
பொன்றுவது பொன்றினல் பொலன்கொ டோளியை
நன்றென நாயகவிடுதிந ன்றரோ

என்று சொல்லிப் போர்க்களம் போகின்றான். யார் இவன் தோளோடு தோள் செல நோக்க நாள் பல ஆகின்றதே என்றால்,

இவன் கால் தேய்க்கப் பயன்படுத்தும் கல்தான் மேரு மலை என்கிறான் விபீஷணன்.

அவனையும் நம்பக்கம் அழைத்துவா என இராமன் சொல்ல விபீஷணன் போகின்றான்.

இங்கே நாம் விபீஷணனுக்கும் கும்பகர்ணனுக்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்து கொள்ளலாம்.

அமுது உண்ணக்கூடியவன் அழிவைத்தரும் நஞ்சினை உண்ணலாமா நீ பிழைத்தாய் என்று அகமகிழ்ந்தேனே என்று சகோதரபாசம் மிகப் பேசுகின்றான்.

நீயும் உயிரோடு திரும்பச் செல்ல வேண்டும்
நானும் அண்ணனுக்காக உயிர் போக்க வேண்டும்.

அண்ணனிடத்தும் தம்பியிடத்தும் பாசம்உள்ள கும்பகர்ணன் பேச்சு

முந்திவந்து இறைஞ்சி னானை
மோந்து, உயிர் மூழ்கப் புல்லி
உய்ந்தனை ஒருவன் போனாய்
எனமனம் உவக்கின் றேன், என்
சிந்தனை முழுதும் சிந்தத்
தெளிவிலார் போல, மீள
வந்ததுஎன் தனியே என்றான்
மழையின்நீர் வழங்கும் கண்ணான்

தன்னைப் போலவே கும்பகர்ணனும் இருப்பான் என்று தவறாக மதிக்கின்றான் விபீஷணன். எனக்குக் கொடுத்த அரசினை உனக்கு நான் தருவேன் என ஆசை காட்டு கின்றான். நித்யத்வ வரங்கேட்டு இருந்த கும்பகர்ணன் நித்திரவரத்தையல்லவா அடைந்தான். எனவே அவன் தூங்கிக் கொண்டுதானே இருப்பான். இது விபீஷணனின் எண்ணம்

இராமனே உன்னை விரும்பிக் கூப்பிட்டான் என்கிறான். ஆனால் கும்பகர்ணன், உன்னைப் போல் நானிருக்கேன் எனப்பதில் இறுக்கிறான்.

நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலம் செய்து விட்டாற்த
உயிர் கொடாது அங்குப் போகேன்

இராமனிடம் தலைவனாகிய நீ இருப்பது பொருத்தம். என்ன ஓர் இகழ்ச்சி!

நான் இராவணனுக்காக உயிர்விடுவது புகழே என்கிறான்
தலைவன் நீ உலகுக் கெல்லாம்
உனக்கு அதுதக்கதே; ஆல்
புலைஉறு மரணம் எய்தல்
எனக்கு இது புகழதே, ஆல்

தீமை செய்தவனைத் திருத்த வேண்டும். உடலுக்குத் தீங்கு செய்யும் கட்டியை அறுத்துத்தானே எறிய வேண்டும் என்ற விபீஷணக் கேள்விக்கு விடையிறுக்கின்றான் கும்ப கர்ணன். திருத்த முடிந்தால் திருத்தலாம். இல்லையெனில் உயிரை விட்டு விட வேண்டும்.

கருத்திலா விறைவன் தீமைகருதினல் அதனைக் காத்துத்
திருத்தலா மாகி னன்றே திருத்தலாந் தீரா தாயின்
பொறுத்துறு பொருளுண் டாமோ பொருதொழிற்
குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாதலுண்டவர்க் குரிய தம்மா

தம்பியின்றித் தமையன் மண்மேல் தனியனாய்க் கிடக்கக் கூடாது என்று சொல்லிவிட்டுப்போரிட ஆயத்தமாகின்றான்.

கையும் கால்களும் அற்றுப் போனாலும், அண்ணனின் நினைவுதான். இறக்கின்ற சமயத்தில் தன்பெண்டு தன் பிள்ளை தன்வீடு என்றுதான் யாருமே நினைப்பார்கள். இறக்கும் பொழுதிலும் அண்ணனுக்கு உதவ முடியவில்லையே என்கின்ற தம்பியாகக் கும்பகர்ணனைக் காணுகின்றோம்.

"ஐயன் விற்ருெழிற்காயிரமிராவண ரமைவிலரந்தோயான்
கையுங் கால்களு மிழந்தவன் வேறினி யுதவலாந் துணை
காணேன்
மைய னேய்கொடு முடிந்தவா ருளென்றும் வரம்
பின்றி வாழ்வானுக்
குய்யு மாறரி தென்றுத னுள்ளத்தினுணர்ந்தொரு
துயருற்ருன்"

என் அண்ணன் இராவணனுக்காக இன்னும் கையும் கால்களும் பெற்றேனில்லையே என்ற தம்பி ஒருபுறம்; இராவணன் முடிவு சீக்கிரம வராதா என்றதம்பி மறுபுறம். இதுமாத்திரமா! கும்பகர்ணன் விபீஷணனுக்காகக் கேட்கின்ற வரம் மாதிரி விபீஷணன், தன் சகோதரர்களுக்காகக் கேட்டதுண்டா எங்காவது?

என் தம்பி விபீஷணன் ஒழுக்க முறையாக அமைந்த நீண்ட காலமாகவுள்ள உயர்வான தரும மார்க்கத்தை அறிவான் நீ அவனை அடைக்கலப் பொருளாகக் காத்தல் வேண்டும் என்று வரங் கேட்கின்ருன்.

என் அண்ணனைக் கொல்லாது விட்டுவிட வேண்டும் என்ற வரத்தைக் கேட்க வேணடாம்!

இறந்துபோன வானரர்களை எல்லாம் மீண்டும் இராமன் உயிர்ப்பிக்கின்ருனே

அப்பொழுது என் அண்ணன் கும்பகர்ணனையும், அறவோனுகிய அதிகாயனையும்

உயிர்ப்பித்துத் தரவேண்டும் என்று கேட்டானு
விபீஷணன்

நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால்
சாதியால் வந்தசிறு நெறியறியான் என் தம்பி
ஆதியாவுனை யடைந்தா னரசவுருக் கொண்டமைந்த
வேதியா வின்னமுனக் கடைக்கலம்யான் வேண்டினேன்

அண்ணனுக்கு உதவ வேறு உறுப்புகளில்லை என்ற வருத்தமும், தம்பிக்கு அடைக்கலம் கேட்கின்ற தகைமையும் கொண்ட கும்பகர்ணன் சகோதரபாசம் உள்ளவன்.

அண்ணனின் முடிவையே அன்றுடம் விரும்புபவனும் கும்பகர்ணனுக்கு மீண்டும் உயிர்தர வேண்டும் எனக்கேட்காதவனும் ஆகிய விபீஷணனும் சகோதரபாசம் உள்ளவன் தான்.

கும்பகர்ணன் செய்நன்றி மிக்கவன்!

விபீஷணன்?

கும்பகர்ணனும் விபீஷணனும் இராவணன் தவற்றை உணர்த்திக் காட்டினுலும், அவர்களின் செயல்முறைகள் வெவ்வேறு போக்கில் உள்ளன.

விபீஷணனின் உள்மனம் சிலசமயங்களில் தன்னையும் மறந்து உண்மை பேசும்

இந்திரசித்து நாகபாசத்தை, இலக்குவன், சுக்ரிவன் அங்கதன் மேல் விட்ட பொழுது அனைவரும் மூர்ச்சை அடைகின்றனர்.

விபீஷணன் மாத்திரம் எந்தப் பாதிப்புக்கும் உள்ளாகவில்லையே.

அது தன், உண்மை உருவத்தை இராமன் அறிந்து சந்தேகப்படுவானே என எண்ணுகிருன் விபீஷணன். அவன் மனம் மத்தினுல் கடையப்பட்ட தயிர் போல ஆகியது. எல்லோரையும்கொன்றவன் என்னையும் கொன்ருனில்லையே! எனச் சோர்ந்து விழுகின்ருன்.

இளையவனைக் கூட்டிக் கொண்டுபோய் தன் மகனால் தோல்வி அடையச் செய்து கொலையுண்ணவும் செய்தான் என்று எண்ணுவார்களோ? வஞ்சகன் என்பார்களோ?

இவர்களோடு நானும் இறந்தேனில்லையே என வருந்துகிறான்.

"ஒத்தலைத் தொக்க வீடி யுய்யினு முய்ந்தே னுள்ளம்
கைத்தலை நெல்லி ஒப்பக் காட்டிலேன் கழிந்து மில்லேன்
அத்தலைக் கல்லேன் யானீன் டபயமென் றடைந்து நின்ற
இத்தலைக் கல்லே னல்லே னிருதலைக் கொள்ளி
யொப்பேன்"

இவன் நினைத்தபடியே இராமனும் பேசிவிடுகின்றான். இந்திரசித்தும் இலக்குவனும் போர் செய்யத் தொடங்கி விட்டார்கள் என்று ஏன் என்னிடம் சொல்லவில்லை. நீ என்னைக் கெடுத்திட்டாய்! என்று இராமன் கடிகின்றான்.

எனவே

விபீஷணனுக்கு

இராவணன் பக்கமும் இடி.

இராமன் பக்கமும் இடி!

எதனால்! நடுநிலைமை வகித்திருப்பானேயானால் இந்நிலைமை வந்திருக்குமா?

இந்திரஜித்தின் குற்றச்சாட்டு: அதைக்காண்போம்

கொட்டுகின்ற முரசு தானாக ஒலியாது. கொட்டுவார் கொட்ட ஒலிக்கின்ற முரசு போலானவன் விபீஷணன்.

பழியோடு வருமாயின் செல்வத்தை, ஆயுதந் தாங்கிய எவரும் ஆசைப்படார். விபீஷணனே ஆசைப்படுகிறான்.

இராவணனும் இராக்கதரும் அழிந்த பின்னர் யாரை வைத்து ஆட்சி செய்யப் போகிறுனே?

தங்கையின் மூக்கையரிந்தவனைத் தலைமேற் கொண்டு ஒடுகிறுன்.

விபீஷணன் செயல்கள் இந்திரஜித்தின் கண்களில் நீரை வர வழைக்கின்றது. இராவணன் இறந்து கிடக்கும் பொழுது அவனுக்காக அழுவாயா அல்லது இராமனைத் தொழுவாயா?

எழுதியே ரனிந்த திண்டோ ளிராவண னிராம னம்பால்
புழுதியே பாயலாக புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்
தழுதியோ நீயுங் கூட் வார்த்தியோ விவனை வாழ்த்தத்
தொழுதியோ் வென்னு செய்யத் துணிந்தனை விசயத்
தோளாய்

இரந்திரஜித்திற்கு விடை கொடுக்கும் பொழுதுதான் விபீஷணன் தன் மனதைத் தெளிவாகச் சொல்லிவிடுகின்றுன்.

எனக்குத் துணை தரும்
என் அண்ணன் பிழைத்தபொழுதே, அவனை நான் துறந்தேன்.

அறத்தினைப் பாவும் வெல்லுமா?
அதனுல்தான் இராமனிடம் சேர்ந்தேன்
பழியென்றுலும் புகழென்றுலும்
மேன்மை எய்தினும் எய்தாவிட்டாலும் கவலையில்லை
என்கிறுன்.

அறம்துணை ஆவது அல்லால்
அருநரகு அமைய நல்கும்
மறம்துணை யாக மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்

துறந்திலேன் மெய்ம்மை: பொய்ம்மை
உம்மையே துறப்பது அல்லால்
பிறந்திலேன் இலங்கை வேந்தன்
பின் அவன் பிழைத்த போதே

ஆம்! விபீஷணன் தன் சகோதரனை உதறி விட்டான்.

நிகும்பலை யாகத்தைத் தொடங்கப் போகிருன் இந்திர ஜித், இதனை எப்படியோ அறிந்து கொள்ளுகிருன் விபீஷணன் நிகும்பலை யாகத்தை இந்திரஜித் முற்றுவித்து விட்டால் அவனை வெல்லுவது என்பது யார்க்கும் முடியாத காரியம். அதைக் கெடுக்கும் நல்ல பணியைச் செய்கின்ருன் விபீஷணன்.

விபீஷணன் "இந்திரஜித்து யாகத்தை முடித்தானுனல் அவனை யாரும் வெல்ல மாட்டார். அவன் யாகம் முடியாமல் வாழ்வு முடியும்படி செய்ய, இளைய பெருமானை என்னுடன் அனுப்புதல் வேண்டும்" என்கிருன்.

இராவணன்தான் தவற்றினை இயற்றி விட்டான் விபீஷணனைப் போ என்று சொன்னுன்.

இந்திரஜித் என்ன குற்றம் செய்தான்?

இராட்சச சேனை காத்து நிற்க, இந்திரஜித் யாகம் செய்து கொண்டிருக்கிருன். அங்கே யாகத்தையும் இந்திர ஜித்தையும் பார்த்து இலக்குவன் வியப்படைய, தன்பணி முடியவில்லையே என்று தூண்டுகிருன்.

"இந்தச் சேனையால் காக்கப்பட்ட வேள்வியைச் சிதைக்கவில்லையானுல் என்றும் வெற்றி பெறமாட்டோம்." என்கிருன் யாகம் அழிந்தது. விபீஷணன் மனநிலை நிறை வேறியது.

"உக்காரவ் வரக்கர்த முரொழியப்
புக்கார்தம ஒருறை தென்புலமே"

அது மாத்திரமா?

இந்திரஜித்தை 14 ஆண்டுகள் எவன் உண்ணாது உறங்காதிருக்கின்றானோ அவனே, இலக்குவனே, கொல்ல முடியும்.

மேலும்

பகலில்தான் இந்திரஜித்தை வெல்ல முடியும்! ஆகா எவ்வளவு பெரிய நன்மைகள் தன் இனத்திற்குச் செய்து விட்டான் விபீஷணன்.

அறத்தின் ஆணிவேர் அப்படித்தானே இருக்கும்!

அறம் பாவத்தை உறுதியாக வெல்லுமாறு சொல்கிறான் விபீஷணன்.

அறம் தானே வெல்லும்!
பின் ஏன் போர் செய்ய வேண்டும்?

அறத்தின் பக்கம் தானே வெற்றி வந்து சேரும் என்று விபீஷணன் பேசாமல் இருந்தால் என்ன! அறம் வெல்லும் என்று அரண்மனை ரகஸ்யங்களை அம்பலப் படுத்த வேண்டுமா? தன் குலத்தை அழிக்க வழிதேடியவன்.

கும்பகர்ணனிடம் தனியாக வருகின்றான் விபீஷணன் அண்ணனுக்குத் துரோக மிழைத்து விட்டான் என நினைத்துக் கொன்றிருக்கலாம்.

இராவணனும் இலக்குவனை வீழ்த்திவிட்டுத் தனியாக நிற்கும் விபீஷணனைக் கோழை என்று விட்டுவிடுகின்றான்.

இந்திரஜித்தும் கூட, தன் குலத்தைச் சார்ந்தவன் தான் என்று மௌனமாகப் போய் விடுகின்றான்.

விபீஷணனே எல்லோரையுந்தான் அழித்துவிட்டானே! இராவணன் செயல்கள் வெறுப்பினை விளைவித்தது என்றால் யார் பக்கமும் சேராமல் தனியே இருக்கவேண்டியது தானே! தேவர்களை எல்லாம் சிறையிட்ட போது விபீஷணன் பிரிந்து போனால் என்னவாம்?

இதுவெல்லாம் இந்திரஜித்தின் மனதிலே தோன்றி விட்ட ஐயப்பாடுகள்.

நம் மனதிலுங் கூடத்தான்.

ஏன் இப்படி எல்லாம் செய்திருக்கக்கூடாது விபீஷணன்? இவர்களை எல்லாம் அழித்தால் இலங்கையில் யார் இருப்பார்கள்?

ஊருள தொருவன் நின்றாய் நியுனை உறையநின்னோடு
ஆருளர் அரக்கர் நிற்பார்? அரசு வீற்றிருக்க ஐயா
ஆம்! ஒருவருமே இருக்க மாட்டார்
பின் ஏன் அழிவிற்கு விபீஷணன் அடிகோலுகின்றான்?

இராவணன் அழவேண்டும் அதனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையை இலக்குவன் மூலம் விபீஷணன் நிறைவேற்றிக் கொண்டான். மண்டோதரியின் புலம்பல் நம் செவியில் விழும் போது, இப்படிப்பட்ட புதல்வனை இழக்கச்செய்து விட்டானே அதுவும் பகைவரைக் கொண்டு என்ற ஏக்கம் வருகின்றது. இராவணன் கூட, இதுவரை அன்புப் பார்வை பார்த்த சீதையை வெறுப்போடு நோக்க ஆரம்பித்து விட்டான் இந்த வீழ்ச்சியால்!

ஐயனே யழக னேயென் னரும்பெற லமிழ்தே யர்ழிக்
கையனே மழுவ னேயென் றிவர்வலி கடந்த கால
மொய்யனே முளரி யுன்ன நின்முகங் கண்டி லாதே
உய்வனோ வுலக மூன்றுக் கொடுவனே செருவ லானே

திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் உள்ள வலிமையைக் காட்டிலும் மிகுதியான வலிமை கொண்டவன், விபீஷணன் சூழ்ச்சியால் வீழ்த்தப்பட்டான்.

இராவணனின் பத்துத் தலைகளும் தனித்தனியே அல்லவா புலம்புகின்றன!

ஆம்! அண்ணனும் அண்ணியும் அருமைப் புதல்வனைப் பிரிந்து அழ அவன் தம்பி இராமனிடம் பெற்றது நல்ல மதிப்பான சான்றிதழ் அல்லவா?

இலக்குவன் இந்திரஜித்தை வெற்றி கொண்டாலும் அது இலக்குவன் வெற்றியல்ல; விபீஷணன் தந்த வெற்றி.

ஆடவர் திலக நின்னா லன்றிக லனுமனென்னும்
சேடனா லன்று வேறோர் தெய்வத்தின் சிறப்பு மன்று
வீடணன் தந்த வென்றி யீதென விளம்பி மெய்ம்மை
யேடவி ழலங்கல் மார்ப னிருந்தன னினிதி னிப்பால்

எவ்வளவு பெரிய சான்றிதழ்!

இதனைப் பெற எப்படியெல்லாம் செயல்பட வேண்டியிருந்தது!

இராவணனுடைய வீழ்ச்சியை இராமனைக் காட்டிலும் விபீஷணனே அதிகம் விரும்பியவன். விபீஷணனும், கும்பகர்ணனும், மாலியவானும் தத்தம் கடமையை முழுமையாகச் செய்யாததால் இராவணனுக்கு அழிவு ஏற்பட்டது இராவணன் எதிரியினுடைய பெருமையை உணராமல் இருந்ததற்கு விபீஷணனே முக்கியமான காரணம் என்று சொல்லலாம்.

விபீஷணன் இராவணன்மேல் செலுத்திய அன்பைவிட இராமன் மேல் அதிக அன்பினைச் செலுத்துகிறான் என்ற தாழ்வு மனப்பான்மை இலங்காதிபதியின் மனதிலே வேரூன்றி விட்டது.

அது மாத்திரமல்ல

எதிரியை வைத்துக் கொண்டே தன் அரசினையும் பறிக்கத் திட்ட மிட்டுவிட்டான் என்பதையும் அறிகிறான்;

விபீஷணன் எதிரியைப் புகழ்ந்தான் என்ருல், விபீஷணன் மனதில் உள்ள எண்ணங்களைச் சிதைக்க எதிரியைக் குறைவாகவே மதிப்பிட்டுப் பேசவேண்டிய இன்றியமையாமை வந்து விடுகிறது.

அசைவில் கற்பின்அவ் அணங்கைவிட்டு
அருளுதி! அதன்மேல்
விசையம் இல் எனச் சொல்லினன்
அறிஞரின் மிக்கான்.

என்று விபீஷணன் சொன்னதுமே இராவணன் தன் தம்பியின் மனநிலை எதிரியின்பால் உள்ளது என்றுணர்கின்ருன்.

இச்சை நல்லன உறுதிகள் இசைக்குவென் என்ருய்
பிச்சர் சொல்லுவ சொல்லினை! என்பெரு விறலைக்
கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை; குறித்தது
அச்சமோ அவர்க்கு அன்பினே! யாவதோ! ஐயா?

"ஓகோ! என்னைக்காட்டிலும் இராமன் வலியன்; அதனால் என்னை வெற்றி பெறுவான்; அவன்மேல் அன்பு கொள்வோம் இதுதானே உன் இராமன் பக்தி" என்று இராமனின் பெருமையைக் குறைவாக மதிப்பிடுகிருன்.

இராமன்
உளுத்துப் போன வில்லை உடைத்தவன்;
ஓட்டையான மாமரத்துள் சுக்ரீவன் அனுமன் காண
அம்பு ஓட்டியவன்.
ஒரு பெண்ணால் அரசிழந்தவன்
ஒரு பெண்ணால் காடு வந்தவன்
என்னால் மனைவியை இழந்தவன்
இன்னும் இன்னுயிர் சுமந்து கொண்டிருக்கிருன்.
இவன் பெருமையை உன்னையன்றி வேறு யார் மதிப்பார்?

எனவே இராமன் பெருமையை இராவணன் அறிய வொட்டாமல் தடுத்தவன் விபீஷணனே!

ஊனவில் இறுத்து ஒட்டைமா மரத்துள் அம்பு ஒட்டி
கூனி சூழ்ச்சியால் அரசிழந்து, உயர்வனம் குறுகி
யான் இழைத்திட இல் இழந்து, இன் உயிர் சுமக்கும்
மானிடன்வலி நீ அலாது ஆர் உளர் மதிப்பார்?

விபீஷணன் பிரகலாதன் கதையைச் கூறியவுடன் கோபம் கொள்கிறான் இராவணன். பிரகலாதன் தன் தந்தை அரசை எதிரியைக் கொண்டு கைப்பற்றினான். ஓகோ நீயும் எதிரியைக் கொண்டு அண்ணன் அரசை...! அதுதான் முடியாது.

ஏழைநீ என்பெருஞ் செல்வம் எய்திப்பின்
வாழவோ கருத்தது வரவற் றாகுமே!

அதுமட்டுமல்லவே
"நண்ணினை மனிதரை நண்பு பூண்டனை
எண்ணினை செய்வினை என்னை வெல்லுமா
றுண்ணினை அரசின்மேல் ஆசை ஊன்றினை
திண்ணிதுன் செயல்பிறர் செறுநர் வேண்டுமோ"

எனவே வஞ்சனை கொண்ட நெஞ்சினை உடைய நீ நஞ்சினைக் கொண்ட பாம்பு எனச்சொல்லி வெகுள்கிறான்.

தன்னுடைய மனதிலே நினைத்ததை முடிக்க வேண்டும் என்பதற்காக, யாரையும் எப்படியும் புகழத் தொடங்குகின்ற மனப்பான்மையை நாம் விபீஷணனிடத்தில் காணலாம். அனுமனின் பெருமையை, அவனைப் பார்த்தவுடனேயே அறிந்து கொள்கின்றான் இராமன். அறிவும் ஆற்றலும்

ஒருங்கே அமையப் பெற்றவன். யாரையும் தன் சொல் வன்மையால் ஈர்ப்பவன்; இது இராமன் அனுமனைக் கண்ட பின் கொண்டமுடிவு. இவன் பிரமனோ? சிவபெருமானோ? என வியக்கிறான்.

இல்லாத உலகத் தெங்கும்
இங்கிவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும், வேதக்
கடலுமே; என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்று அன்றே
யார்கொல் இச்சொல்லின் செல்வன்
வில்லார்தோள் இளைய வீர
விரிஞ்சனோ! விடைவல் லானோ?

இப்படி அனுமனை அனுமானித்த இராமனிடம் விபீஷணன், அடைக்கலம் ஆனவுடன் மேலும் புகழ்கிறான்.

புகழவேண்டியதுதான் ஆனால் எங்கே?

இலங்கையின் வலிமையைப் பற்றிச் சொல் என இராமன் வினவிய உடன் அரண்மனைப் பலத்தையும், அதன் அரசனின் வலிமையையும் சொன்னபின்னால் அனுமனை ஓகோ என்று புகழ்கிறான்.

இவ்வளவு வலிமையுடைய இராவணனை வெல்ல முடியுமா என இராகவன் நினைத்து விடக் கூடாது; அனுமன், வலிமை மிக்க இராவணன் நகரையே அலங்கோலப்படுத்தி விட்டான். அதைரியம் கொள்ளக்கூடாது என்ற குறிப்புப் படத்தான் இலங்கை கேள்விப்படலத்தில் அனுமனைப் புகழ் கிறான்! எப்படி?

ஈடுபட்டவர் எண்ணிலர் தோரணந் தெழுவால்
பாடுபட்டவர் படுகடன் மணலினும் பலரால்
கூடுபட்டது கொடிநகர் அடுபுலி துரந்த
ஆடுபட்டது பட்டனர் அனுமனால் அரக்க"

ஆமாம்! இராவணனையே திகைக்க வைத்ததே; 'சுட்டது குரங்குளரிசூறைஆடிடக் கெட்டது கொடிநகர்'' இராவணன் பெருமையையே அடக்கியவன் அனுமன் என்று சொல்ல வேண்டிய செய்தியைச் சொல்லும் தருண மறிந்து சொல்லி விடுகின்ருன் விபீஷணன்.

கொண்ட கொள்கையில் திண்ணமாக இருந்தவன் இராவணன். மாபெரும் கலைஞன்: ஒரு பெரிய நாட்டின் சக்கரவர்த்தி! அவன் உடல் வன்மைதான் எப்படிப்பட்டது.

வாரணம் பொருத மார்பும்
　　வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவர்க் கேற்ப
　　நயம்பட உரைத்த நாவும்
தாரணி மௌலி பத்தும்
　　சங்கரன் கொடுத்த வாளும்.

அல்லவா அவன் உடலுறுப்புக்கள் பெற்றிருந்தன! அவன் பெற்ற வரங்கள் அளவிட முடியுமா?

முக்கோடி வாணாளு முயன்றுடைய பெருந்தவமும்
　　முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படா எனக்கொடுத்த
　　வரமு மேனைத்
திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடந்த புயவலியும்
　　தின்று மார்பில்

இவ்வளவு மாபெரும் கலைஞன் வீழ்ச்சியைக் கவிஞன் கூட ஆற்ருது, இறந்தும் இறக்காதவன் என்கிருன்.

மண்டோதரி புலம்பிப் புலம்பித் தன் மூச்சையே விடுகிருள். இராவணன் போவதற்கு முன்னால் தன் உயிர் போகவில்லையே. இது அவரின் உடலோ! தலைகளோ புதைந்து கிடக்கின்றன! என அரற்றுகிருள்.

அன்னேயோ அன்னேயோ வாகொடியேற் கடுத்தவா
வரக்கர் வேந்தன்
பின்னேயே இறப்பதுமுன் பிடித்திருந்து கருத்ததுவும்
பிடித்தி லேனே
முன்னேயோ விழுந்ததுவு முடித்தலேயோ படித்தலேய
முகங்க டானே
என்னேயோ வென்னேயோ விராவணனே ிறந்தரி
சிதுவோ பாவம்.

எனப் புலம்புகிருள். விபீஷணன் எள்ளலாகவே தன் அண்ணனை அங்கும் குற்றம் சாட்டிப் புலம்புகின்ருன்.

முன்பு நான் இராமன் பெருமையை எடுத்துச் சொன்னேன் இப்பொழுது இறந்த பின்னவது உணர்கிருயா நீ

என்ணுதே எண்ணியசொ லின்றினத்தா னெண்ணு
தியோ
வெண்ணி லாற்றல்
அண்ணுவோ அண்ணுவோ அசுரர்கடம் பிரளயமே
அமரர் கூற்றே

பிறன்மனையை விரும்பும் ஆசை தீர்ந்து விட்டதோ?
உன் குலமனைத்தையும் உன்னோடு சாகச் செய்தவனே

பத்துத் தலைகளால் இராமனை வணங்காது, நின்மதியீனத்தினுல் சீதையைக் கவர்ந்தாயே (சீதையை எடுக்கும் பொழுது விபீஷணன் தூங்கிக் கொண்டிருந்தானே)

பிரமலோக வாழ்வா? வீரசுவர்க்கமா? கைலாசவாசியானுயா சந்திரனும் மன்மதனும் தத்தம் தொழிற் செய்வரோ?

போர்மகளைக் கலைமகளைப்
புகழ்மகளைத் தழுவியா
பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத்
தேவர்க்குந் தம்மோயைத்
தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவாதுன்
உயிர்கொடுத்துப் பழிகொண்ட
பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ
திசையானைப் பலை இறுத்த
பருதி மார்பால்

என்று இறந்து கிடக்கும் அண்ணன் தன்சொல்லை இப்பொழுதாவது உணர வேண்டுமென்று எள்ளலாகவும் குத்தலாகவும் பேசுகின்றான்: 'வீடணு தக்கது அன்றால்' என்று இராகவனை கண்டிக்கக்கூடிய அளவிற்கு விபீஷணனின் புலம்பல் இருந்தது என்றால் விபீஷணனின் சகோதரபாசந் தான் என்னே!

என்னவெல்லாமோ சொன்னேன் கேட்கவில்லையே என்று அங்கலாய்த்துக் கொள்ளும் விபீஷணன் ஓர் உண்மையை மறைத்து விட்டான் இராவணனிடமிருந்து.

காமவேதனையால் பாதிக்கப்பட்டிருந்த இராவணன் மனம் திருந்த அந்த உண்மையையும் சொலவி இருக்கலாம். கேட்பானே இராவணன் என்றில்லாமல் எல்லாவற்றையும் சொல்லி விட்டோம் என்ற பெருமையையாவது விபிஷணன் பெற்றிருக்கலாமே!

ஆமாம் சூர்ப்பநகையின் சூழ்ச்சியை விபீஷணன் அறிந்திருக்கிறான். மறைத்துவிட்டான்.

இராவணனின் மைத்துனன் சூர்ப்பநகையின் கணவன். மைத்துனனைக் கொன்றவனை, இராவணனைப் பழிவாங்கத் துடித்தாள்.

போரின்றிச் சோம்பலாய் இருக்கும் இராவணனுக்குக் காமம் மூளச் செய்து அதில் குளிர் காயத் துடித்தவள் சூர்ப்பநகை.

கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்என் றதுகுறித்துக்
கொடுமை கூர்ந்து
பல்லாலே இதழ்மறைக்கும் கொடும்பாவி நெடும்பாரப்
பகைதீர்ந் தாளோ
நல்லாரும் தீயாரும் நரகத்தார் சொர்க்கத்தார்
நம்பி நம்மோடு
எல்லோரும் பகைஏறே யார்முகத்தே விழிக்கின்றாய்
எளிமை ஆனாய்

உள்ளத்தில் இப்பொழுதிருந்த கருத்து முன்னமேயும் இருந்திருக்கும். மறைத்தொழுகிவிட்டான் விபீஷணன்.

"உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து எல்லாம் உளன்"

எப்படி விபீஷணன் உலகத்தார் உள்ளத்து உறையமுடியும்?

இராவணன் இறந்து விடுகின்றான். விபீஷணன் இராமனை வணங்கிவந்து ஆட்சிபீடத்தில் அமர்கின்றான். சீதைக்குத் தான் வென்றுவிட்ட செய்தியைச் சென்று சொல்லி வருமாறு இராமன் அனுமனை அனுப்புகின்றான். சீதையிடம் சோபனச் செய்தியைச் சொல்லிவிட்டு அனுமன் ஒரு செயலைச் செய்யப் புறப்படுகின்றான்.

"எம்பிராட்டியே! உனக்கு இதம் செய்த என்தாய் போன்றவளான திரிசடை தவிர (விபீஷணன் மகள்) இந்த இராட்சசிகள் எல்லோரையும் எரித்தழிப்பேன் இவர்கள் உடம்புகளை நகங்களினால் பிளந்து எமனுக்கு இரையாக்கு வேன்" என்கிறான்.

அரக்கியரைச் சீதை காப்பாற்றுகிறாள், இவர்கள் தீமை ஒன்றும் செய்யவில்லை. ஒன்றும் செய்ய வேண்டாம் என் கிறாள்.

கூனியினும் கொடியவர்கள் அல்லர். எனவே இவர்களை ஒன்றும் நான் செய்ய மாட்டேன் என்ற வரத்தைக் கேட் கின்றாள்.

"என்னதீமை இவரிழைத் தார்அவன்
சொன்ன சொல்லின தல்லது, தூய்மையோய்"

என்பதோடு வரத்தையும் வாங்கிக் கொள்கிறாள். அனு மனின் தன்மைதான் சீதைக்குத் தெரியுமோ?

"எனக்கு நீ அருள் இவ்வரம் தீவினை
தனக்கு வாழ்விட மாய சழக்கியர்
மனக்கு நோய்செயல் என்றனள், மாமதி
தனக்கு மாமறு தந்த முகத்தினள்"

சீதை வரங்கேட்டு அனுமனைத் தடுக்கின்றாள் மனிதாபி மானம் மிக்கவளாக.

அந்நாட்டின் அரசன் விபீஷணன் தன்நாட்டு மக்களைப் பிறர் துன்புறுத்தும் பொழுது, ஒன்றுமே பேசாமல் இருப் பதும் ஏனோ? தன்மக்களைப் பாதுகாக்கும் கடமையினின்று தவறியவன் ஆகிவிட்டான் அவன்.

இராமன் விபீஷணு! நீ போய்ச் சீதையை அலங்காரம் செய்வித்துக் கூட்டிக் கொண்டுவா என்று பணிக்கிருன். விபீஷணன் சென்று சீதையின் பாதங்களைப் பணிந்து, இராமபிரான் உன்னைப் பார்க்க விரும்புகின்ருன். தேவர் களும் உன்னைத் தரிசிக்க வந்திருக்கின்ருர்கள். உன்னை அழைத்து வரும்படி என்னை வேண்டினன்' என்று அலங் கரித்து வரும்படி சொன்னதைச் சொல்லாமல் வெறுமனே சொல்லுகின்ருன்.

சீதை இலங்கையில் எப்படியிருந்தாளோ அதே நிலைமை யில் வருவதைப் பார்த்து, இராமன் கட்டளையைச் சொல்லு கின்ருன். சொன்ன செய்தியை முழுமையாக ஏனே விபீஷ ணன் முதலிலேயே சொல்லவில்லை?

ஆனந்தக் கண்ணீர் பெருக அடிபணிந்து நிற்கின்ருள் சீதை.

பெண்மையை மென்மையாக நோக்கினனே? இராமன் பாம்பெனச் சீறினன்.

"இராவணன் நகராம் இலங்கையூரில் நெடுநாளாக வாழ்ந் தாய்;
அவன் கீழ் அடங்கியிருந்தாய்.
அளிக்கப்பட்ட அறுசுவை உணவினை அருந்தினய்;
அச்சமின்றி உயிர் வாழ்ந்தாய்"

என்று கடிகின்ருன்.

நீதி எங்கெல்லாம் வளைகின்றதோ அங்கே தன் முதுகினைக் கொடுத்து நிமிர்த்திவிடும் விபீஷணன்,

இராகவா!

ஓவியம் புகை உண்ட வடிவத்தை ஒத்திருந்தாள் பிராட்டி. கண்ணீரால் நனையும் ஆடை. வெயிலில் காயும்

ஆடை. தலைமுடிவாரப்படாமல் சடையாக மாறிவிட்டது இராவணன் தொட்டால், அவன் தலை வெடித்துவிடும் என்றெல்லாம் சொல்லாமல் இருக்கின்றானே!

அது மாத்திரமா?

கற்பின் கனலிக்கு மாபெரும் சோதனை அல்லவா இராமன் வைத்து விட்டான்.

கற்பினுக் கரசினைப் பெண்மைக் காப்பினை
பொற்பினுக் கணியினைப் புகழின் யாக்கையை
தற்பிறந் தருள்புரி தருமம் போலியை
அற்பினந் தலைவனும் அமைய நோக்கினன்

இவ்வளவு பெருமை உடைய சீதையைத் தீக்குளித்துத் தன் கற்பினை நிலை நாட்ட வேண்டுமென்றான் இராமன்.

பெண்மையும் பெருமையும் பிறப்பில் கற்பெனும்
திண்மையும் ஒழுக்கமும் தெளிவும் சீர்மையும்
உண்மையும் நீஎனும் ஒருத்தி தோன்றலால்
வண்மையின் மன்னவன் புகழின் மாய்ந்ததால்

என்றும் பேசுகின்றான். வார்த்தையாலே கொல்லுகின்றான் சீதையை இராமன்.

மறைகளே வாய்திறந்து அரற்றின

"சினத்தினால் சுடுதியால் தீச்செல் வாஎன்றாள்
புனத்துழாய்க் கணவற்கும் வணக்கும் போக்கினள்"

என்று சொல்லித் தீக்குள் பாய்கிறாள்.

பிறருடைய செயல்களில் கூட அறம் வளர்கின்றது என்றால் தலையிடும் விபீஷணன்.

இராமனை ஏன் 'நீ செய்வது தவறு' என்று கண்டித்து இருக்கக் கூடாது.

அவனுக்கு வேண்டியது அவன் 'மனத்தேயது' எல்லாம் முடிந்து விட்டது.

எனவே வாய்மூடி மௌனமாக இருந்துவிட்டான் என்று சொல்ல முடியுமா?

இனி, பொதுப் படையாகத் தமிழகத்தில், கூட இருந்தே குழிபறிப்பார் யாருமிருந்தால் விபீஷண வேலை செய்கிறுன் என்கிறுர்கள். மாற்றுர் எதிரியினருக்கு உளவுச் செய்திகளை அனுப்புகின்ற ஐந்தாம் படை விபீஷண வேலையுடையது எனவும் கூறுகிறுர்கள்.

இரண்யன் அல்லது இணையற்ற வீரன் என்று பாரதிதாசனர் ஒரு நாடகம் எழுதியுள்ளார். தன் இனத்தையே அழிக்கும் மாபெரும் பணியை பிரகலாதன் செய்வதாக அதில் காட்டுகிறுர். அப்பிரகலாதனை விபீஷணன் உதாரணம் காட்டுகிறுன் புலவர் குழந்தை அவர்கள் தம் இராவண காவியத்தில் விபீஷணனை நெஞ்சிலே நஞ்சைக் கொண்ட கொடும்பாவி கோடாரிக் கம்பு என்றெல்லாம் ஏசுகிறுர். உதாரணத்திற்கு ஒன்றினைக் காணலாம்.

அன்பிலன் அருளிலன் அறமிலன் சலன்
தென்பிலன் திடமிலன் செம்மை நன்றிலன்
முன்பிலன் மதியிலன் முறைமை கண்டிலன்
இன்பிலன் மக்கட் பண்பெதுவு மில்லனே

இதுமட்டுமா!

அடிமையும் தீமையும் அவாவும் வஞ்சமும்
கொடுமையும் சிறுமையும் கொலையும் கூரமும்
மடைமையும் பொய்மையும் மறமுங் கள்ளமும்
படிமையாய் மகவெனப் படில் வந்தவன்

இப்படியெல்லாம் பின்னல் வந்த புலவர் பெருமக்களால் விபீஷணன் ஏசப்படுகின்றுன்.

அவனிடத்தும் இராவணனைத் தந்தையாகவும் தாயாக வும் நினைக்கின்ற பண்பு உண்டு. இராவணன் முதுகுத் தழும்புகளைக் கண்டு நாணமடைந்த இராமனையே செவ்வழி அல்லாச் சொற்களைச் சொல்லவேண்டாம் என எடுத்துரைக் கும் குணமும் உண்டு.

அறத்தை விபீஷணன் விரும்பி நாடினன் என்று சொல் வார்கள்; விபீஷணன் போர் முடிந்த முன்னல், திருவடி பணிய வேண்டும் என்று இராமனோடு சென்றிருக்க மாட்டானே?

தாங்கரும் தவமேற் கொண்டு, தனியாகக் காட்டில் வாழாமல், இலங்கை அதிபதியாகமகுடமும் சூட்டியதேனே?

கும்பகர்ணனுக்கும் விபீஷணனுக்கும் பெரிய வேறுபாடு கள் உள்ளன

இருவருமே அறத்தை எடுத்துச் சொன்னர்கள்.
இராவணன் செய்வது தவறென்றார்கள்.
ஆனல் வள்ளுவம் சொல்வது போல.

கும்பகர்ணன் செஞ்சோற்றுக் கடமையை நினைவு கொண்டான்

அண்ணனிடமிருந்து விலகாமல் தன் கடமையைச் செய் தான். அண்ணன் இறந்து கிடக்கும் நிலையைத் தான் விரும்பியதில்லை கும்பகர்ணன்.

விபீஷணனே இராவணன் பிணத்தின் மேலிருந்தே முடி சூடிக் கொண்டான்.

ஆனல் விபீஷணனுகிய உட்பகையை இராவணன் அறிந்திருந்தான்; ஆனல் அடக்கி ஒடுக்கவில்லை.

உறல் முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும்.

உட்பகையை ஒறுக்காமையால் இராவணனுக்கே தீங்கு வந்தது.

புரந்தார் கண் நீர்மல்கச் சாகும் சாக்காடு கும்பகர்ணனுக்குக் கிடைத்தது போல விபீஷணன் பெறவில்லை.

"கெடுங்காலை கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்"

உண்மையும் அதுதானே விபீஷணனைப் பார்க்கும் பொழுது இந்திரப் பெரும்பதம் இழக்கின்றாய் ஆதலால் நொந்தனன் என்று அன்போடு ஆதரவோடு பேசுகின்ற விபீஷணனை பின்வரும் குறளோடு பொருத்திப் பார்ப்போம்.

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்

விபீஷணன்தான் அன்பற்றுப் போய்விட்டானே. ஆமாம்!

"சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்"

இராவணனுக்கு இன்னா செய்தவன், மாசற்றானா! தன் குடிக்கல்லவோ குறைவு தந்து விட்டான்.

சேர மன்னனிடம் மாடலன் வருகின்றான் வடக்கர்கள் பழித்துவிட்டனர் என்றவுடன் வெகுண்டவனை, மாடலன், சோழனைத்தான் வடக்கர்கள் பழிகூறினர் என்றான்.

சோழமன்னனைப் பழித்தாலென்ன? சேரமன்னனைப் பழித்தாலென்ன? பாண்டியமன்னனைப் பழித்தாலென்ன?

பழிப்புக்கும் இழிவுக்கும் உள்ளாகியது தமிழர்குலம், தமிழினம் என்று போர்க்களம் சென்று, வடக்கர்களை வென்று வருகின்றான்.

அப்படிப்பட்ட குலமரபைப் பெரிதாகப் பேணும் பாங்கு விபீஷணனிடம் இல்லையென்றே சொல்லலாம்

குடிசெயல் வகையினர், பருவம், காலம் பார்க்க மாட்டார்கள். ஏன் மானத்தைக் கூட எண்ணார்கள்.

குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

இதையெல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும். தன் குடியை உயர்த்த எவ்வகையில் வழி செய்தான் விபீஷணன்?

இறுதியாக

சங்க காலத்திலே ஔவையார், பிசிராந்தையார் போன்ற புலவர் பெருமக்கள் அரசப் பெருமக்களை பாடினார்கள் ஒரே இனத்துக்குள் தமிழ் இனத்துக்குளேயே பகைமை இருக்கக்கூடாது. சோழருக்கும் சோழருக்கும்! சேரருக்கும் சேரருக்கும்! பாண்டியனுக்கும் பாண்டியனுக்கும் பகைமை இருந்து வந்தது. குறுநில மன்னனைப் பெருநில மன்னர்கள் பகைத்தார்கள். சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகைமை உண்டாக கோவூர்க்கிழார் அழகான பாடலைச் சொல்லுகின்றார்.

சேரர்க்குரிய பனம்பூவோ, பாண்டியர்க்குரிய வேப்பம் பூவோ உன் பகைவன் சூடியிருக்கிறானே! இதில் யார் தோற்றாலும் தோற்றது சோழர் குடிதான் என்று உலகம் சொல்லும் என்பார்.

இரும்பனை வெண்டோடு மலைந்தோன் அல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந்தன்றே நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே
இருவீர் வேறல் இயற்கையு மன்றே அதனல்
குடிப்பொரு ளன்றுநும் செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே

அறமாகப் பிறவி நோய்ப் பகைவகை இராமனைக் கண்டா லும் விபீஷணன் அறிஞரின் மிக்கானும், மேதாவி கட்கெல் லாம் மேலானவனக இருந்தாலும்

தன் இன அரசரிடமிருந்து நீங்கியதும்

தன் இன அரசரைப் பற்றி உளவு சொல்லியதும்

ஆகியவை விபிஷணப் பாத்திரத்தை இழுக்குறவே செய் கின்றன.